# திருநெல்வேலி கம்பபாத சேகரன் இ. சங்கரன் இயற்றிய

# திருநெல்வேலித் தல விநாயகர்

# பொள்ளாப் பிள்ளையார் ஊஞ்சல்

யோக நெறியின் ஆதாரா மோன நிலையில் அமர் முனியே
ஏக தந்த திருமுகனே எல்லாம் ஆகி நின்றவனே
பாகம் கொண்டான் அருட்செல்வா பக்கம் நான்கை உடையோனே
ஆகு உகைக்கும் பொள்ளாக் களிறே ஊஞ்சல் ஆடுகவே. 1.

மகதி முனிவன் யாழ்மீட்ட மலர்சேர் செய்யாள் மனம்களிக்க
தகவாம் தாளம் மால் அமைக்க தவள மரையள் இசைபாட
அகத்து வைத்து ஆடிபாடும் அடியர் விழிகள் குளிர்ந்திடவே
புகழ்சேர் நெல்லைப் பொள்ளாத களிறே ஊஞ்சல் ஆடுகவே. 2.

சிவனார் விழியில் ஒளிர்மணியே சிவையாள் உயிரில் வளர்மணியே
புவனம் உண்டான் மகிழ்மணியே புவிகள் படைத்தோன் மனமணியே
தவத்தோர் கருத்தில் எழுமணியே சித்தி புத்தி உயிர்மணியே
அவனி புகழும் பொள்ளாத களிறே ஊஞ்சல் ஆடுகவே. 3.

சொல்லும் பொருளும் கடந்தவனே பண்மை பருமை பொருளானாய்
எல்லோன் அல்லோன் குணங்கூறி பாம்பை எழுப்பும் அறிவுதந்து
சொல்லில் கூரு மந்திரத்தை உணர்த்தி அருளும் விநாயகனே
நெல்லைத் தலத்து பொள்ளாத களிறே ஊஞ்சல் ஆடுகவே. 4.

உடலைக் காலா நிறுத்திவைத்து உயிராம் பலகை தனைஅமைத்து
திடமாம் உணர்வு விட்டமாக ஊக்க விதானம் சேர்த்திளைத்து
தொடரும் வடமா நெறிநான்கும் பண்பாய் அமைத்த மணித்தூரி
கடத்து மதம்பெய் பொள்ளாத களிறே ஊஞ்சல் ஆடுகவே. 5.

கரியும் பரியும் பின்வாங்க கிழவி அவ்வை விரைவுடனே
பெரிய கயிலை வைத்தவனே பேசா நெறியைக் காட்டியவா
கரியோன் விகடம் களித்தவனே கதிரின் ஒளியாய் விரிந்தவனே
அரவு அணிந்த பொள்ளாத களிறே ஊஞ்சல் ஆடுகவே. 6.

தொறட்டி கயிறு மோதகமும் தொங்கு துதிக்கை பொற்குடமும்
முறமாம் செவி விசிறிகொண்டு உலகு உயிர்கள் வெப்பமதை
உறவாய் வந்து நீக்கியருள் நெல்லை பொள்ளா விநாயகனே
அறமும் மறமும் அருள்தேவே அணிப்பொன் ஊஞ்சல் ஆடுகவே. 7.

கணனை அழிந்து மணிதந்தாய் அனலனை உண்டு அருள்செய்வாய்
பணங்கொள் சேடன் தொழுநாதா பனிசேர் பிறையை முடிவைத்தாய்
கணங்கள் தமக்கு நாயகனே காணும் பொருளில் கலந்தவனே
குணமார் பொள்ளா விநாயகனே கனக ஊஞ்சல் ஆடுகவே. 8.

எருக்கு அறுகு மருமல்லி எழிலா மலர்கள் தவழ்மார்பா
பெருகு கங்கை அரவுடனே பிறையும் ஒளிரும் திருமுடியாய்
உருகு தொழும்பர் இடர்களைவோய் உலகு அடங்கு பெருவயிறா
திருசேர் பொள்ளா விநாயகனே பொன்னாம் ஊஞ்சல் ஆடுகவே. 9.

அஞ்சு முகத்தோன் தருமகவே அஞ்சு படையோன் மருகோனே
அஞ்சு கணையோன் மைத்துனனே அஞ்சு பூத நாயகனே
மஞ்சு தவழும் மணிதீப அரசே பொள்ளா விநாயகனே
நஞ்சார் நாக பந்தனனே நற்பொன் ஊஞ்சல் ஆடுகவே. 10.

முற்றும்